அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைத்தமிழ் வெளியீடு IX

தில்லைவிடங்கன், மாரிமுத்தாப் பிள்ளை,
செவற்குளம், கந்தசாமிப் புலவர்,
நகரம், முத்துவீரப்பக் கவிராயர்

என்னும் மூவரும் இயற்றிய

# தமிழிசைப் பாடல்கள்

இவை
அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசைக்கல்லூரி
இசையாசிரியர்களாகிய
திருப்பாம்புரம், திரு. T. N. சாமிநாத பிள்ளை,
,, திரு. T. N. சிவசுப்பிரமணிய பிள்ளை
இவர்களால் இசை அமைப்புக்களும்

ஷை பல்கலைக்கழகத்துத் தமிழாசிரியர்
வித்துவான், திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்களால்
பாடல்களும் திருத்தி அமைக்கப்பெற்று

அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தாரால்
தருமபுர ஆதீனம் ஞானசம்பந்தம் பதிப்பகத்தில்
பதிப்பிக்கப்பெற்றன.

 1945 [விலை ரூபாய் 3-0-0.

## உள்ளுறை

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

## திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்

இயற்றியவை

### கடவுள் வாழ்த்து

ஆசிரிய விருத்தம்

பூவார் மணம்போல் உலகமெலாம்
பொருந்தி யியக்கும் பெரும்பொருளே
புனிதம் நிறைந்த வுணர்வுடையோர்
புகழிற் கிடக்கும் புண்ணியனே

நாவார் கலைகள் துணிபொருளா
நவில்நா யகனே மெய்யுணர்வின்
நலமார் வடிவே யகவிருளை
நலிந்து விளங்கி நல்லன்பர்

தூவார் உளத்திற் சுடர்விளக்கே
துகளற் றொடுங்கித் தமைமறந்து
துய்ப்பார்க் கினிய செழுந்தேனே
தோன்றாத் துணையே அறுவரெனும்

மேவார் தமைச்செற் றுளந்தெளிந்தோர்
வினைமா சறுக்கும் மெய்ப்பொருளே
விரும்பிப் பணியும் எம்மையருள்
வெள்ளத் தியைத்துக் காத்தருளே.

### அண்ணாமலைப் பல்கலைக்கழக வாழ்த்து

கட்டளைக் கலித்துறை

கண்ணார் மணியிற் புரப்போ ரெனும்பொருட் கார்பொழிந்த
தண்ணார் நிதிநீர்ச் செழிப்பிற் கலைப்பயிர் தான்வளர்க்கும்
அண்ணா மலைப்பல் கலைக்கழ கப்பே ரணிநிலையம்
விண்ணார் புகழொடு நாளுநா ளோங்கி விளங்குகவே.

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் நிறுவிய

செட்டி நாட்டரசர்

## உயர்திரு. டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்



### உருவச் சிறப்பு

ஊக்கம் உறுதி உணர்ச்சி யருஞ்செயலின்
ஆக்கம் அறம்புகழன் பாண்மைமுதல்—நீக்கமறக்
காண்டற் கமைந்த கவினுரு அண்ணாமலைமன்
ஆண்டகையின் நல்லுருவ மாம்.

மகாமகோபாத்தியாய—பண்டிதமணி

**மு. கதிரேசச் செட்டியார்.**

மகாமகோபாத்தியாய—பண்டிதமணி

திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் கூறிய

## வாழ்த்து

சீர்மலி கொடையால் அறிவினால் ஆற்றுஞ்
செயற்கருஞ் செயலினால் உலகிற்
பேர்மலி புகழாற் பல்கலைக் கழகம்
நிறுவிய பெருமையாற் சிறந்தோன்
ஏர்மலி தருநல் இசைத்தமிழ் வளர்க்கும்
ஏந்தல்நம் செட்டிநாட் டரசாம்
நார்மலி யுளத்தண் ணாமலை வள்ளல்
நலமுற நீடுவா ழியவே.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதித் தலைவர்

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் எழுதிய

# முகவுரை

அண்ணாமலைப் பல்கலைக்கழக மூலமாகச் செட்டிநாட்டரசரவர்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றுவரும் இசைத்தமிழ் வெளியீடுகளுள் இஃது ஒன்பதாம்தொகுதியாகும். இதன்கண் தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளையவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் இருபத்தைந்தும், செவற்குளம் கந்தசாமிப் புலவரவர்கள் இயற்றிய கீர்த்தனைகள் பதின்மூன்றும், சுரசதி நான்கும், நகரம் முத்துவீரப்பக் கவிராயர் இயற்றிய கீர்த்தனைகள் பன்னிரண்டும் ஆக 54 இசைப்பாடல்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் மாரிமுத்தாப் பிள்ளையவர்கள் கீர்த்தனைகள் 25-ல் 8, 11, 19. என்னும் எண் உள்ளனவல்லாத 22-க்குச்சிறந்த முறையில் இசையமைத்தவர் இப்பல்கலைக்கழகத்து இசைக்கல்லூரி ஆசிரியர் (Senior Lcteurer) திரு. T. N. சாமிநாத பிள்ளையவர்களாவர். இவர்கள் இசையமைப்புப் பெரும்பாலும் பிறரால் எடுத்தாளப்படாத அரிய இராகங்களிலே அமைந்துள்ளது. இந்நாட்டில் இசையாசிரியர் பலராலும் அடிக்கடி மேற்கொள்ளப்பட்டுவரும் இராகங்களிலேயே மீண்டும் மீண்டும் புதிய இசையமைப்புக்களையும் அமைத்துக் கொண்டு சென்றால் அரிய பல இராகங்கள் வழக்கொழிந்துபோம் என்னும் எண்ணத்தாலும், அபூர்வ இராகங்களில் தமிழ்ப்பாடல்கள் அமைக்கப்படுதல்

தமிழிசை வளர்ச்சிக்கு இன்றியமையாததென்னுங் கருத்தாலும், இசைக்கல்லூரி மாணவர் பயிற்சிக்கு இது பெரிதும் வேண்டத் தக்கதென்பது குறித்தும் இங்ஙனம் அரிய பண்களில்மெட்டு அமைக்கப் பெற்றன வாம்.

எட்டையபுரம் ஊற்றுமலைச் சமஸ்தானங்களில் இயலிசைப் புலவராக விளங்கிய செவற்குளம் கந்தசாமிப் புலவர் இயற்றிய கீர்த்தனைகள் பதின்மூன்றோடு தமிழிசைக்கு இன்றியமையாத முறையில் அவர்கள் இயற்றிய சுரசதி நான்கும், நகரம் முத்துவீரப்பக் கவி ராயர் தாம் பாடிய கீர்த்தனைகள் பன்னிரண்டும் ஆக உருப்படிகள் 29-யும் அவர்கள் பாடிக்காட்டக்கேட்டுச் சுரக்குறிப்புத் திருத்தஞ் செய்தவர்கள் இசைக்கல்லூரி ஆசிரியர்களாகிய திரு. T. N. சாமிநாத பிள்ளையவர் களும் (Senior Lecturer) அவர்கள் தம்பி திரு. T. N. சிவ சுப்பிரமணிய பிள்ளையவர்களுமாவர். இப்புத்தக வெளி யீட்டிற்குரிய கையெழுத்துப் பிரதியைச் செவ்வையாக எழுதியும் இசைக்குறிப்பில் அச்சுப்பிழை நேராமல் திருத்தம் செய்து கொடுத்தும் உதவிபுரிந்தவர் திரு. T. N. சிவசுப்பிரமணிய பிள்ளையவர்களாவர்.

இத்தொகுதியிலுள்ள எல்லாப் பாடல்களையும் இலக்கிய முறையில் செம்மை செய்தும், அச்சுப்பிழை நேராமல் திருத்தம் செய்தும், மாரிமுத்தாப் பிள்ளை, செவற்குளம் கந்தசாமிப் புலவர், நகரம் முத்துவீரப்பக் கவிராயர் என்னும் இவர்கள் வரலாற்றுச் சுருக்கங்களை எழுதித்தந்தும் உதவிபுரிந்தவர் இப்பல்கலைக்கழகத்துத் தமிழாசிரியர் வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளை யவர்களாவர்.

இத்தொகுதியில் அமைந்த சுரசதி என்னும் இசைப் பாடல்கள் நான்கும் கல்லூரி மாணவர் பயிற்சிக்குப் பெரிதும் வேண்டத்தக்கன என்பது சிறப்பாகக் கருதத் தக்கது. வழக்கப்படி இப்புத்தகம் அச்சிடப்பட்டு

வெளிவருதற்கு வேண்டுவனவற்றை மேற்கொண்டு செய்தவர் இப்பல்கலைக் கழகத்துத் தமிழ் விரிவுரையாளரும் தமிழிசை ஆலோசனைக்குழுவின் அமைச்சரும் ஆகிய பண்டித, வித்துவான் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள்.

தமிழிசையமுதைக் கடமையாகவும் அதனால் விளையும் சிறந்த பயன் குறித்தும் தமிழ்மக்கள் நுகர்ந்து இன்புற வேண்டுமென்னுங் கருணையால் மாண்பு மிக்க செட்டிநாட்டரசரவர்கள் இச்செயலைக் கண்ணும் கருத்துமாக மேற்கொண்டு ஆதரித்துச் செய்துவரும் பேருதவி தமிழ்மக்கள் உள்ளங்களைப் பெரிதும் இன்புறுத்துவதாகும். இதுகுறித்து நம் அரசர் பெருந்தகையாரின் நன்றியை நாம் உளங்கொளுங் கடப்பாடுடையேம்.

இப்புத்தக வெளியீட்டிற்கு மேலே குறிப்பிட்டவாறு பல்லாற்றானும் உதவிபுரிந்த அன்பர்கள் எல்லோர்க்கும் தமிழிசை ஆலோசனைக் குழுத்தலைவன் என்ற முறையில் என் நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

> இன்ப வுணர்ச்சி யினிய தமிழிசைக்கே
> என்ப துணர்மின் இருநிலத்தீர்—துன்பொழிவு
> வாய்ப்ப முயல்மின் மருளன்மின் மாசிரிய
> ஏற்ப விழிமின் எழுந்து.

அண்ணாமலைநகர்,
16—5—1945.

மு. கதிரேசன்.

# தில்லைவிடங்கன் மாரிமுத்தாப் பிள்ளை
## வரலாற்றுச் சுருக்கம்

பெரிய கோயிலென்றும் கோயிலென்றும் சைவப் பெருமக்களால் பண்டைக்காலந்தொட்டு இன்றுகாறும் வழங்கப் பெறும் தில்லையம்பதிக்கு வடகிழக்குத்திசையில் தில்லைவிடங்கன் என்னும் சிற்றூர் உள்ளது. அது தில்லைத் திருக்கோயிற் கோபுரங்களில் ஏற்றப்படும் திருவிளக்குகளின் ஒளியைக்கண்டும், அர்த்தயாம வழிபாட்டின்போது அடிக்கப்படும் மணியோசையைக்கேட்டும் அம்பலவாணரை நினைந்து இன்புறத்தக்க அணிமையிலுள்ளது. அவ்வூரில், சைவ வேளாண் மரபிலுதித்த தெய்வங்கள்பெருமாள்பிள்ளை யென்பவர் ஒருவர் இருந்தார். அவர் "வேளாளன் என்பான் விருந்திருக்க வுண்ணாதான்" என்னும் நீதிக்கு இணங்க விருந்தினரைப் பேணுதல் சிவவழிபாடு செய்தல் முதலிய தம் குலவொழுக்கத்தின் வழுவாது செல்வமும் சிறப்பும் உடையவராய் இல்லறமேற்கொண்டு இனிதுவாழ்ந்தனர். அவருடைய அருந்தவப்புதல்வரே இங்குக் கூறத்தொடங்கிய **மாரிமுத்தாப் பிள்ளையாவார்.** இவர், தில்லைக் கூத்தப்பெருமான் திருவருளால் இளம்பருவத்திலேயே பாட்டுக்கள் எழுதும் பேறுபெற்றார். இவருடைய புதல்வர்கள் மூவரில் முதல்வராகிய தெய்வங்கள்பெருமாள் பிள்ளை யென்பவரும், மூன்றாமவராகிய குமாரசாமிப் பிள்ளை யென்பவரும் தமிழ்ப்புலவர்களாய்த் திகழ்ந்தனர். "மகனறிவுதந்தையறிவு" என்பதற்கேற்ப மூத்த மகனாகிய தெய்வங்கள்பெருமாள்பிள்ளை தமது பன்னிரண்டாம் ஆண்டில், தில்லைத் திருமூலட்டானேசுரர் திருமுன்னர்க் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள உலகப் பெருந்தாயாகிய உமையம்மையின்மேல் உனாயவள் மாலை என்னும் ஒருபிரபந்தம் இயற்றினார். இந்நூலைப் பாடி முடித்தவுடன் தெய்வங்கள் பெருமாள்பிள்ளை அறிவு மயங்கிக் குடும்பநினைவு சிறிதுமின்றி அலைந்து திரிந்தனர். இதனைக்கண்டு தந்தையாராகிய மாரிமுத்தாப்பிள்ளை மிகவும் வருந்தித் தில்லையம்பலவாணரை மனமொழி மெய்களால் வணங்கித் தம் மகனுக்கு நேர்ந்திருக்கும் மதிமயக்கத்தைத் தீர்த்தருள வேண்டுமென்று முறையிட்டு வந்தனர். ஒருநாள் அர்த்தயாம வழிபாடுமுடிந்தபின், கவலையோடு இறைவனை நினைந்துகொண்டே அங்கு ஓர் திண்ணையில் துயிலும்போது, அடியார்க்கெளியராகிய கூத்தப்பெருமான் ஒரு

சைவப்பெரியார் திருக்கோலத்துடன் அவர் கனவில் வெளிப் பட்டுக் காட்சியளித்து, "இவ்வூர்க்கு ஒருபிரபந்தம் இயற்றி ஞல் உமது கவலை நீங்கும்" என்று கூறி மறைந்தருளினர். துயிலுணர்ந்து எழுந்த பிள்ளையவர்கள், இறைவன் திருவருளை வியந்து வியந்து தொழுது, அடங்காத மகிழ்ச்சியுடையராய்ப் பொழுது புலர்ந்தபின் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு திருக்கோயிலுக்குச்சென்று இறைவனை வழிபட்டு அவரிட்ட கட்டளைப்படி, புலியூர் வெண்பா என்னும் நூலைப்பாடி முடித்தனர். தம்மாக்னுக்கு நேர்ந்திருந்த மதிமயக்கம் தீர்ந்தது. தாமு மனக்கலக்கமும் நீங்கப்பெற்றுர். இவ்வரலாறு இங்ஙனம் கன்னபரம்பரையாக வழங்கப்படுகின்றது. அன்றி யும், அந்நூற்பாயிரத்தில்,

> "ஐயன் சபைநாதன் அன்பாய்ப் புலிசைவெண்பாச்
> செய்யென் றினிதுரைக்கச் செப்பினேன்—மெய்யென்று
> பாட்டிற் பிழையிருந்தாற் பார்த்துப் பெரியோர்கள்
> காட்டித் திருத்தக் கடன்."

என்று அவரே கூறியிருத்தலும் இதனை வலியுறுத்துவதாகும்.

இவர் இயற்றியனவாகக் கூறப்படுவன, சிதம்பரேசர் விறலிவிடுதூது, வருணபுரி ஆதிமூலீசர் குறவஞ்சி, ஆதிமூலீசர் நொண்டிநாடகம், அநீதிநாடகம், புலியூர்ச் சிங்காரவேலர் பதிகம், விடங்கேசர் பதிகம், நடராசப்பெருமான்மீது இசைப் பாடல்கள் 50, இரதபந்தம் நாகபந்தம் முதலிய சித்திரக் கவிகள், பலவித வண்ணங்கள், பல தனிப்பாடல்கள் முதலி யனவாம். கீர்த்தனங்களாகவும் பதங்களாகவும் இவரியற்றிய இசைப்பாடல்கள் ஐம்பதில் இப்போது கிடைத்திருப்பவை இருபத்தைந்தேயாகும். இங்ஙனம் முத்தமிழ்ப்புலமையும் உத்தம சைவசீலமும் உடையவராகிய மாரிமுத்தாப் பிள்ளை யவர்கள் நெடுங்காலம் வாழ்ந்திருந்து சாலிவாகன சகம் 1709 ம் ஆண்டிற்கியைந்த பிலவங்க வருடம் சித்திரை மீ 14-ஆம் நாள் வளர்பிறைச் சத்தமி கூடிய திங்கட்கிழமையிரவு 4-மணியள வில் தில்லைக்கூத்தப்பெருமானுடைய தூக்கிய திருவடிமலரில் மலரின்மணம்போல் இரண்டறக்கலந்தார். இற்றைக்கு 158 ஆண்டுகளாகின்றன. இவற்றை நோக்கும்போது இராம நாடகக் கீர்த்தனையியற்றிய சீகாழி அருணசலக் கவிராயரும் இவரும் ஒருகாலத்தவரென அறியலாம்.

இவருடைய பாடல்களெல்லாம் சொற்பொருள் வளஞ் செறிந்து திட்பமுடையனவாய்க் காணப்படுகின்றன. பழிப்பது போலப்புகழும் முறையில் இயற்றியுள்ள "வீடும் அம்பலமர்கி நீரும் அந்தரமானீர் வேலை பொல்லாப்பாகியோ" என்ன பிழைப்புன்றன் பிழைப்பையா - இதை - எண்ணிப்பார்த்தால், யார்க்கும் பழிப்பையா" "உம்மைப்போல் ஆட்டையெடுத்து அம்பலத்தில் நிற்பார் ஒருவரைக் காணேன் ஐயா" "இன்னம் வயிரம் உன்றன் நெஞ்சிலேயிருப்பது என்ன காரணத்திற் கையா" என்று தொடங்கும் பாடல்களும், "எந்நேரமும் ஒரு காலைத்தூக்கிக் கொண்டு இருக்கிறவகை யேதையா" என்னும் முதற்குறிப்புள்ள பாடலில் அம்பலவாணர் காலைத்தூக்கிக் கொண்டிருப்பதற்குப் பலவாறு ஐயுற்றுக் கூறுங்காரணங் களும், "பாருங்கள் வந்து பாருங்கள் ஆட்டுது பாம்பு பிடா ரனையே" "அம்பலத்தாடல் நடிப்பென்பதை யும்மிடத்தில் அறிந்தேன் அறிந்தேனையா" என்று நயந்தோன்றக் கூறிய பாடற்கருத்துக்களும், "என்ன காரியத்துக்கு இந்தப் பேயாண்டிமேல் இச்சைகொண்டாய் மகளே" என இறை வணக்கண்டு காமுற்ற மகட்கு வெறுப்புத்தோன்றும் வண்ணம் ஒரு தாய் கூறுவதாக அமைத்திருக்கும் பாடலும் படித்து இன்புறத்தக்கனவாம். இசைப்பாடல்களில் இத்துணைப் பொருட்செறிவுள்ள பாடல்களைக்காண்டல் மிகவும் அரிது. இத்தகையபாடல் பாடும் இசைவாணர்கள், சொற்கள் தெளி வாக விளங்கும்படி பொருளுணர்ச்சியோடு பாடிக் காட்டுவராானல், இசையறிவு படைத்தவரேயன்றி இயற் றமிழ்ப்புலவர்களுங்கேட்டு இன்புறுவர் என்பதற்கு ஐயமில்லை. இங்ஙனம் பாடுவோரும் கேட்போரும் பொருளுணர்ச்சியில் ஈடுபடுவாராயின் ஒருபாட்டில் சரணம்ஒன்றைப்பாடியஅளவில் நிறுத்த வேண்டுவதில்லை. ஏனைச் சரணங்களையும் பாடலாம். அதனல் வெறுப்புத் தோன்ருது. தமிழிசைப்பாடல்களியற்றிய பண்டைப்பெருமக்கள் யாவரும் தம்பாடல்கள் ஒவ்வொன்றி லும் பலசரணங்கள் அமைத்திருப்பது, தம்முடைய சிறந்த கருத்துக்கள் பலவற்றையும் பிறர் அறிந்து அறிவுவளர்ச்சியும் அகமகிழ்ச்சியும் ஒருங்கே அடையவேண்டுமென்பது கருதியே யாகும். இவ்வுயரிய நோக்கத்தைப் புறக்கணிப்போமானல் தாய்மொழிப்பாடல்களே வேண்டும் என்று தொடங்கிய பெருமுயற்சி முழுவெற்றியடைந்ததாகாது என்பதனைத்

தமிழிசைப்புலவர்கள் சிந்தித்துத் தெளிதல்வேண்டும். ஆகவே இவ்வளவு அருமையான பாடல்களை ஆக்கித்தந்த மாரிமுத்தாப் பிள்ளையவர்களுக்கு இசையறிஞர் செய்யும் கைம்மாறுவது, அப் பாடல்களை வளமும் பொருள்நயமுந் தோன்றப் பாடித் தாமும் இன்புற்றுப் பிறரையும் இன்பந்திளைக்கச் செய்தலேயாகும்.

## செவற்குளம் கந்தசாமிப் புலவர் வரலாற்றுச் சுருக்கம்.

இவர், திருநெல்வேலி ஜில்லா சங்கரநயினார்கோயில் தாலூகாவைச்சேர்ந்த செவற்குளம் என்னும் சிற்றூரில், பரம்பரையாகக் கவிபாடுந்திறமையும் இசையறிவும் படைத்த புலவர் மரபில் ஓர் நற்குடியிற்பிறந்தவர். உயர்ந்த குணங் களும் சிறந்த கடவுட்பத்தியும் வாய்க்கப்பெற்றவர். தமிழ் தெலுங்கு என்னும் இருமொழியும் பயின்றவர். சுமார் நூற்றிருபது ஆண்டுகட்கு முன்னர் எட்டையபுரம் சமத்தானத்தை ஆண்டுவந்த எட்டப்பமன்னரவர்களால் தம் சமத்தானப் புலவராக ஏற்றுக்கொள்ளப்பெற்றவரும், அவ் வரசர் விருப்பத்திற்கிணங்கி வள்ளியம்மைநாடகம் பாடியவரும் ஆகிய முத்துவீரப்பக் கவிராயருடைய பேரராவார். தம் பாட்டனூர் காலந்தொட்டு எட்டையபுரம் சமத்தானத்திற்கும் தங்கள் குடும்பத்திற்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந் தமையால் இவர் தம் இளம்பருவத்திலே, எட்டையபுரத்து அரண்மனையில் இசைப்புலவராக வீற்றிருந்த சுப்பராய பாகவதர் என்பவரிடம் இசைக்கலையை வரன்முறையாகக் கற்றுத் தேர்ந்தார். இதனை, "சுப்பராயசற்குரு பொற்பாதம் அனுதினம் துதித்து நான் பணிவேனே" என்று ஆசிரிய வணக்கமாக இவர்பாடிய இசைப்பாட்டால் அறியலாம். இனிய சாரீரவளமுடையவர். இயற்றமிழ்ப்பாக்களும் இசைத் தமிழ்ப்பாடல்களும் இயற்றுந்திறமை வாய்ந்தவர். வயது முதிர்ந்தகாலத்தினும் இவருடைய மிடற்றோசையும் அதன் இனிமையும் மாறுபடவில்லை.

இவர் தக்க பருவம் அடைந்தகாலத்தில், கரிவலம்வந்த நல்லூர்ப்பொன்னம்மாள் என்னுங் கணிகைமாதுக்கு இசை கற்பித்துவந்தார். அப்போது ஆண்டில் இளைஞராயும், யமகம் திரிபு மடக்கு முதலிய சொல்லணிகள் அமைந்த செய்யுளியற்றும் ஆற்றல் மிக்கவராயும் இருந்த சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் இவருடைய இசைநயத்தில் ஈடுபட்டு ஒரு பாட்டெழுதிக்கொடுத்தார். அப்பாட்டு வருமாறு:-

"கனைச்சாரீ ரந்தனைநேர் குயிலினங்கள் அனுதினமுங் கனம்படிந்து
கனைச்சாரீ ரந்தனைமே வும்பொழில்விட் டொளிர்வரையைக் கையில்வில்லா
கனைச்சாரீ ரந்தனையர் தமிலிளையோ னன்னகந்த சாமிவித்த
கனைச்சாரீ ரந்தனைய் மானவிசை யிற்சிறிது கற்கத்தானே"

இ-ள். (அங்) கனை சாரீரம் தனைநேர் குயில் இனங்காள் - பெண்களின் மிடற்றோசை யொப்பக் கூவுகின்ற குயிற் கூட்டங்களே. அனுதினமும் கனம்படிந்து கனைச்சு - நாள் தோறும் மேகங்கள்வந்து பொருந்தி ஒலிசெய்தலால். ஆர் ஈரம் தனைமேவும் பொழில்விட்டு ஒளிர்வரையை - மிக்க குளிர்ச்சியைப் பொருந்திய சோலைகள் இடைவிட்டு விளங்கும் மேருமலையை. கையில் வில்லாக நைச்சார் - கையில்தாங்கும் வில்லாக வளைத்த சிவபெருமானுடைய. ஈர் அம் தனையர்தமில் - இரண்டு அழகிய புதல்வர்களில். இளையோன் அன்னி கந்தசாமி வித்தகனைச்சாரீர் - இளையவனாகிய முருகனையொத்த கந்தசாமி யென்னும் பெயர்பெற்ற தக்கோனைச்சேருங்கள். அந்த நய மான இசையில் சிறிதுகற்க - அந்த இனிமையான இசையில் சிறிது கற்றுக்கொள்வதற்கு. என்பதாம். இதனால் இவருடைய குரலினிமையை அறியலாம்.

இற்றைக்கு 50 ஆண்டுகளுக்கு முன்னர், வீரகேரளம் புதூர்ச் சமஸ்தானத்தில் அரசராயிருந்த இருதயாலய மருதப்ப பாண்டியத் தேவரவர்கள், சிறந்த கல்வியும் ஈகைக் குணமும் வாய்க்கப்பெற்றவராயும், புலவர்கள் புதிய புதிய நயந்தோன்றப்பாடும் பாடல்களைக்கேட்டு அவற்றின் சொற் பொருட்சுவைகளை நுகர்ந்து இன்புறுதலே தம்வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவராயும் இருந்தமையால், பல புலவர்கட்கு உண்டி உடை உறையுள் முதலியன உதவி ஆதரித்துவந்தார். எப்போதும் பலபுலவர்கள் தம்மைச் சூழ்ந்திருப்ப, விண்மீன் நடுவில் தண்மதிபோல விளங்குவார். அங்ஙனம் அவரால் ஆதரிக்கப்பெற்ற புலவர் பலருள் நம் கந்தசாமிப்புலவரும் ஒருவராவர். இவர் மருதப்பபாண்டியன் மேற் பாடிய பாடல்கள்பல ஊற்றுமலைத் தனிப்பாடல்திரட்டு என்னும் புத்தகத்திலுள்ளன. வீரகேரளம்புதூர் நவநீத கிருஷ்ணர்மீது தூதுக்கண்ணி யென ஒரு நூலும் இயற்றி யுள்ளார். அஃது ஏட்டிலிருக்கின்றது. பாண்டியனவர்கள் நாள்தோறும் மாலைநேரத்தில் நவநீதகிருஷ்ணர் கோயிலுக்கு வரும்போது, நம் கந்தசாமிப்புலவரும், வண்ணக்களஞ்சியம் எனப் பெயர்பெற்ற வாசுதேவநல்லூர்க் கந்தசாமிப்புலவரும் சேர்ந்து தம்பூராச்சுருதி மீட்டிக்கொண்டு பத்திச்சுவைததும்ப இன்னிசை பாடுவர். இருவருடைய மிடற்றிசையும் ஒன்று பட்டிருக்கும். தம்பூராச்சுருதிக்கும் இவர்கள் குரலுக்கும்

வேற்றுமை தோன்றுது. அன்றியும், இக்காலத்து இசைவாணர்கள் பாடுங்காற் காணப்படும் உடல்தொழிற் குற்றங்களும் நிகழமாட்டா என்பர். ஆகவே இந்நிகழ்ச்சி,

> " கருங்கொடிப் புருவம் ஏறா கயல்நெடுங் கண்ணும் ஆடா
> அருங்கடி மிடறும் விம்மாது அணிமணி யெயிறுந்தோன்றா
> இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடினாளோ
> நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ வென்று நைந்தார் "

என்று காந்தருவதத்தை யாழ்வாசித்துக்கொண்டு பாடிய தன்மையைத் திருத்தக்கதேவர் வருணித்திருப்பதை நினைவூட்டுகின்றது.

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியாருடைய செய்யுட்களின் அமைப்பையும் இனிமையையுங்கண்டு மகிழ்ந்த இருதயாலய மருதப்ப பாண்டியனவர்கள், அவரையும் தம் புலவர்குழாத்துள் சிறந்த ஒருவராகவைத்து ஆதரித்துவந்தார். புலவர்க்கும் ரெட்டியாருக்கும் பல ஆண்டுகளுக்குமுன்பே உண்டாகிய நட்பானது மீண்டும் நெருங்கிப்பழக நேர்ந்தமையால் வளர்வதாயிற்று. ரெட்டியார் வெண்பா விருத்தம் முதலான இயற்றமிழ்ப்பாக்கள் இயற்றும் ஆற்றலைக்கண்டு இவரால் இசைத்தமிழ்ப்பாடல்களும் ஆக்குவித்தல் வேண்டுமென்று புலவர் கருதினார். ஆனால், ரெட்டியார்க்கு இசைப் பயிற்சி யில்லையாதலால் புலவர்,

> " தானதன தானான தனனா — தான
> தந்ததன தானதன தந்ததன தனனா "

என்பனபோல் வெவ்வேறான சந்தக்குறிப்புக்களை யெழுதித் தருவர். ரெட்டியார் அவற்றிக்கேற்ப,

> " சீர்வளர்ப சுந்தோகை மயிலான் — வள்ளி
> செவ்விதழ லாதினிய தெள்ளமுது மயிலான் "

எனப் பாடலெழுதி முடிப்பர். முடிந்தபின் புலவர் அதற்குத் தகுந்த இசைவகுப்பார். இங்ஙனம் கழுகுமலைக் கந்தநாதனைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு இயற்றப்பட்ட பாடல்களே பின்பு காவடிச்சிந்து என்னும் பெயரால் வெளியிடப்பெற்றன.

அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்தைத் தமிழ்நாட்டில் அறியாதாரில்லை. இசையறிவிற் குறைந்தவரும் நிறைந்தவரும் விரும்பிக் கற்கும்படி அவற்றிற்கு இனிய இசையமைத்துத் தந்தவர் நம் கந்தசாமிப்புலவரேயாவர்.

இப்புலவர், ஊற்றுமலை மன்னரவர்கள் தம்மிடம் வைத்திருந்த உண்மையன்பினால் பல ஆண்டுகள் வீரகேரளம் புதூரில் குடும்பத்துடன் வாழ்க்கை நடத்திவந்தார். இவருடைய தகுதியையும் பிறநிலைமைகளையும் நன்கு அறிந்த அரசர், இவரைநோக்கி "நீரும் உம் குடும்பத்தாரும் உணவுக்காகப் பிறருதவியை நாடாமல் இருக்கும்படி செய்து வைப்பேன். உம் ஊர்ப்பக்கத்தில் நல்லவயல் நிலங்கள் விலைக்குக் கிடைக்குமாறு பார்த்துவாரும்" என்று அனுப்பினார். இவரும் அதற்காகத் தம் ஊர்க்கு வந்திருந்தார். ஆயினும் இவர்க்கு அத்தகைய நல்லூழ் இல்லாமையால் எதிர்பாராதநிலையில் அவ்வரசர் இறந்தாரென்ற செய்தி கேட்கப்பட்டது. அப்போது மனம்வருந்தி இவர் பாடிய இரங்கற்பாக்களில் சிலவருமாறு:-

1. "எத்தனையோ காலமிருந் தாதரிப்பா
 யெனஇறுமாந் திருந்த எங்கள்
சித்தமெலாங் கொள்ளைகொண்டு கணப்பொழுதில்
 எங்கேநீ சென்றாய் ஐயா
உத்தமனே யுனைத்தொடர்ந்து பிடிக்கவுமோ
 பாயமறி யோமென் செய்வோம்
வித்தகசு சீலபிர தாபஇத
 யாலயனே வேந்தர் வேந்தே"

2. "தேனமுது பாலமுது முதலியசித்
 திரவமுது செகத்தோர்க் கீந்தாய்
வானமுதங் கொணர்ந்துதரல் வேண்டுமென்றோ
 அலதுசிந்தா மணிசந் தானம்
தானமுத விடுசுரபி தனைவெல்லவோ
 விண்ணுலகிற் சார்ந்தா யையா
ஞானமுதல் வனைவணங்கும் எங்களித
 யாலயனே நளின மாலே"

ஷ்டு. "மதுரகவி கேட்குமுன்றன் செவியொடுச
பாசெனச்சொல் வாயுந் திவ்ய
பதுமமலர் போன்றவிரு கொடைக்கரமுங்
கடைக்கணிக்கும் பார்வை தாமுங்
குதுகலஞ்சேர் திருமுகமுங் கொண்டுசமா
தியிற்புகுந்து கொண்டா யந்தோ
முதுகலைதேர் இருதயா லயஎங்கட்
கொருவிதமும் மொழிந்தி லாயே"

இப்பாடல்கள், அரசருடைய கல்வியறிவு கொடைக்குணம் என்பவற்றையும், இவர் அரசரிடம் வைத்திருந்த அன்பையும் அவர் புலவர்பாற்காட்டிய கருணைத் திறத்தையும் புலப்படுத்து வனவாம்.

அப்பால், வீரகேரளம்புதூரைவிட்டு ஊர்க்கு வந்தபின் சேற்றூர், சிவகிரி, தலைவனூர்கோட்டை, அளகாபுரி, கொல்லங்கொண்டான் முதலான சமீன்களில் பழக்கம் உண்டாயிற்று. சேற்றூர்ச் சேவகபாண்டிய துரையவர்களை முதல்முறை பார்க்கப்போயிருந்தபோது, துரையவர்களும் அவர்க்குக் கெஞ்சிராக் கற்பித்துவரும் ஆசிரியராகிய மான் பூண்டியா பிள்ளையவர்களும் ஒருங்கிருந்தனர். அவர்கள் முன்னிலையில் தமிழிசைப்பாடல்கள், தெலுங்கு கீர்த்தனங்கள் சுருமைர்த சுலோகங்கள் ஆகிய இவற்றைச் சிலபணிநேரங்கள் வரை பாடினர். அவற்றைக்கேட்டு மனமகிழ்ந்த பிள்ளை யவர்களும் துரையவர்களும் பார்ப்பனரல்லாதாரில் தெலுங்குக் கீர்த்தனங்களையும் சுலோகங்களையும் சிறிதும் உச்சரிப்பு வழு வின்றிப் பொருளுணர்ச்சியோடும் இசைவளத்தோடும் இவ் வளவு இனிமையாகப் பாடினவர்களை இதுவரை நாம் கண்ட தில்லை யெனப் பாராட்டிப் பல வரிசைகள் வழங்கப்பெற்றூர். மடவார்குளம் மூத்தையா பாகவதர், வாசுதேவநல்லூர்ச் சுப்பையா பாகவதர் முதலானவர்கள் இவரிடம் அன்பும் மதிப்பும் வைத்திருந்தனர். சங்கீத கலாநிதி, காயகசிகாமணி முத்தையா பாகவதரவர்கள். தாம் பிறந்த வூராகிய அரிகேசவ நல்லூரில் இருந்தபோது, ஆண்டுதோறும் கந்தர்சஷ்டித் திரு விழாக்காலத்தில் இசையறிஞர்கள் பலரையழைத்து 6 நாட்கள் வரை இசையரங்கு நடத்தி அவரவர் தகுதிக்கேற்ப உபசரித்து வந்தனர். அப்போது நம்புலவரவர்களும் அங்கேசென்று

இசையரங்கு நடத்திப் பாகவதரால் பலவாறு உபசரிக்கப் பெற்றுள்ளார்.

இவர்பாடிய்பாடல்கள் பலவற்றில் இப்போது நமக்குக் கிடைத்திருப்பவை 17 பாடல்களேயாகும். அவற்றுள் நான்கு சுரசதிகள். ஏனைப் பதின்மூன்று பாடல்களும் சிவபெருமான் முருகன், திருமால், திருமகள் என்னுங் கடவுளரைக்குறித்துப் பாடப்பட்டன. சுரசதிகள் நான்கில் ஒன்று இருதயாலய மருதப்ப பாண்டியன்மீது இயற்றப்பட்டது. மற்றொன்று சேற்றூர்ச் சேவகப்பாண்டிய துரையைப் பாராட்டியது. ஏனையொன்று தலைவனூர்கோட்டைச் சமீன்தார் இரட்டைக் குடை இராமசாமிப் பாண்டியன்மேற் பாடப்பட்டது. பிறிதொன்று நாயகசாமி என்பவரைப் பாட்டுடைத்தலைவராப் பெற்றுள்ளது. பாலகுலம் என அவரதுகுலமும், மருதூர் என்று அவரது ஊரும் குறிக்கப்பெற்றுள்ளன. ஆயினும் அவர் இன்னாரென்று நன்கு தெரியவில்லை.

இப்புலவரைப்பற்றிய வரலாறுகள் இன்னும் பல வுளவேனும் அவை இசைமாணவர்க்கு வேண்டாதனவாதலின் இங்கு எழுதப்படவில்லை. இங்ஙனம் அமைதியாக வாழ்க்கை நடாத்திவந்த புலவரவர்கள் 73 ஆண்டுகள்வரையிருந்தார். இறுதிக்காலத்தில் பக்கவாதம் என்னும் நோயாற் பீடிக்கப் பட்டுப் பேச்சின்றிப் படுக்கையிலிருக்க நேர்ந்தது. துந்துபிஆண்டு புரட்டாசித்திங்கள் 10-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை இரவு 4-மணியளவில் " சதகோடிசூரியர் உதயமானதுபோலும் தகுந்த தெய்வீகசுதேகா, பதயுகளந்தனை நிதநினை தொண் டர்பால் பாலிக்குங் கருணைப்பிரவாகா " என்று தாம் முன்பு இயற்றிய பூபாள இராகக்கீர்த்தனத்தை இனிமையாக எடுத்த குரலோடுபாடினர். இவ்வினிய இசையைக்கேட்டு மனைவிமக்களும் அயல்வீட்டாரும் அருகில்வந்து, ஓராண்டுவரை வாய்ப்பேச்சின்றியிருந்தவர்கள் இப்போது சிறிதும் சொல் தடுமாற்றமின்றி இவ்வளவு ஊக்கத்துடன் இனிமையாகப் பாடுகின்றார்களே என்று வியந்தும் இனி நோய் நீங்கி நலம் பெறுவார்களென்று மகிழ்ந்தும் நின்றனர். அப்பாடல் முழுதும் உருக்கத்தோடுபாடி முடிந்தபின் பக்கலில் நின்றவர் களைப்பார்த்து " இதோ பூம்பல்லக்கு வந்திருக்கிறது. என்னை யழைக்கின்றார்கள் யான்போகின்றேன் நீங்கள் இருங்கள் "

என்றுகூறி உயிர்நீத்தார். இவர் இறைவன் திருவடி நீழலெய்தி இற்றைக்கு 23 ஆண்டுகளாகின்றன. இவ்வரலாறுகள்யாவும் இவர் குடும்பத்தாரும் பிறருங் கூறியவற்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டன. இவருடைய பாடல்கள்யாவும் இசையறிஞர்களுக்கு நல்விருந்தாகும் என்பதற்கு ஐயமில்லை.

## நகரம் முத்துவீரப்பக் கவிராயர் வரலாற்றுச் சுருக்கம்.

இவர், நகரம் முத்துசாமிக் கவிராயருடைய தம்பியின் மகள்வயிற்றுப்பேரன். இவர் தம்முடைய தாய்வயிற்றிலிருக்கும்போதே தந்தையை இழந்தமையால் பாட்டனார்வீட்டில் பிறந்து வளர்ந்தவர். செவற்குளம் *கந்தசாமிப்புலவர்க்கு மருகராவார். தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும் செய்யுளியற்றுவதிலும் இசையிலும் பயிற்சியுள்ளவர். பாரதம் இராமாயணம் திருவிளையாடல் கந்தபுராணம் ஆகிய இந் நூல்களை இனியஇசையோடு படித்துப் பிரசங்கஞ் செய்யுந் தொழிலை மேற்கொண்டிருந்தார். பல்கலைக்கழகத்தார் விருப்பத்திற்கிணங்கி இங்குவந்திருந்து, நகரம் முத்துசாமிக் கவிராயரியற்றிய கீர்த்தனங்களையும் பதங்களையும்,செவற்குளம் கந்தசாமிப்புலவர் பாடல்களையும் பழைய இசையமைப்பின்படிப் பாடிக்காண்பித்தார். தாமும் பலபாடல்களையாக்கித்தந்தார். இவருடையபாடல்களாக இந்நூலில் 12 பாடல்கள் உள்ளன. இற்றைக்கு இரண்டு ஆண்டுகட்கு முன்னர்த் தமது 52-ஆம் பிராயத்தில் இறைவன் திருவடிநீழலெய்தினர்.

# பாடல் முதற்குறிப்பு அட்டவணை முதலியன.

உ

தில்லைவிடங்கன், திரு. மாரிமுத்தாப் பிள்ளை அவர்கள்

இயற்றிய

# தமிழிசைப் பாடல்கள்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து இசையாசிரியர்,

**திரு. டி. என். சாமிநாதப் பிள்ளை அவர்களால்**

இசையமைக்கப்பெற்றவை.

## 1

இராகம்: காப்பிநாராயணி — ஆ: ச ரி ம ப த நி ச் — { அரிகாம்போதியிற் பிறந்தது.

தாளம்: ஆதி — அ: ச் நி த ப ம க ரி ச

### பல்லவி

தில்லைச் சிதம்பரமே அல்லாமல் வே
றில்லைச் சுதந்தரமே — தில்லை

**அனுபல்லவி**

சொல்லுக்கெளிது நெஞ்சே சொல்லுவாய் சிவகாம
வல்லிக் கன்புள்சபை வாணன் வீற்றிருக்கும் — தில்லை

**சரணம்**

1. தோற்றும் மலவேரைக் காற்றிவிடு பஞ்சாகத்
தூற்றி யொழித்துக்குறை யாற்றி மபக்கந்தீரத்
தேற்றி அணையுந்திரு நீற்றினால் இருவினை
மாற்றிப் பரகதியில் ஏற்றி வைப்பதற்குத் — தில்லை

2. தத்துவ நிலைதெரிந் தொத்த மனதோடிரு
கைத்தலம் எதிரேகு வித்தே முடிமீதில்
வைத்த பிறகுபய் பத்தியு டனேதெரி
சித்த பொழுதிலுயர் முத்திதந் தாளத் — தில்லை

3. காசினி தனிற்கயி லாசரென் றொருநட
ராசர்இ ருந்துபவ நாசஞ்செய் வதிதுவே
வாசஞ்செய் வோருக்கு மோசம் வராதுகி
லேசம்வ ராதெம பாசம்வ ராது — தில்லை

ப. ரீ மா பா தா நீ ச்ா ச் ச் நி த | பா ; ; ; | ப ம ம க க ரி சா ||
தில்லைச் சி தம் ப ர மே . . . . . . . அல் . . . லா . மல்

2. ரீ மா ரி ம பா ம ப தா ப த் நீ | த நி ச் ரி ச்ா ; | நி த ப ப ம க ரி ச ||
தில்லைச் சி . தம் ப . ர மே . . அல் . . லா ம,ல் . . வே . று . .

ரீ மா பா தா நீ ச்ா ச் ச் நி த | பா ; ; ; | ; ; ; ; ||
இல்லைச் சு தந் த ர மே . . . . . . . . . . .

அ.ப. தா நீ நி த த ப மா ம க க ரி மா | மா பா தா நீ | நி த த ப த நி ச்ா ||
சொல் லுக் கெ ளிது . செஞ் . . . . சே சொல்லு வாய் . சி . வ . கா . ம

ச்ா ரி ம்ா ம க் க் ரி ச்ா நீ தா | ப த நீ த நி ச்ா | நி த த ப ம க ரி ச ||
வல் லிக் கு அ ன் , பு ள் ள ச பை வா . . ணன் . வீ ற் றி . ரு க் கு ம்

"தில்லை" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

ச. ; தா. நி தா பா மா கா . ரீ | ; சா , ரி சா | நீ தா பா தா , ||
தோற்றும் ம ல வே ரைக் காற் றி வி டு பஞ் சா கத்

; பா, த நீ சா ரீ மா ம க | க ரி சா, ரி மா | பா நீ நி த த ப ||
தா ற்றி யொ ழித் து க்கு றை . : . யாற் றி ம யக் கந் தீ . ர த்

தா நீ நி த த ப மா ம க க ரி மா | மா பா தா நீ | நி த த ப த நி ச்ா ||
தேற்றி அ . ணை . யுந் தி . . . ரு நீ ற்றி னல் . இ . ரு . வி . னை

ச்ா ரீ ம்ா ம்க் க் ரி ச்ா நீ தா | ப த நீ த நி ச்ா | நி த த ப ம க ரி ச ||
மாற்றிப்ப ர . . . க தி யில் ஏற் . றி . வைப் ப . தற் கு . . .

"தில்லை" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

## 2

இராகம்: கந்தருவமனோகரி — ஆ. ச ரி ம ப ச — { சாருகேசியிற் பிறந்தது
தாளம்: ரூபகம் — அ. ச நி த ம க ரி ச

பல்லவி

தெரிசித்த பேரைப் பரிசுத்தர் ஆக்கச்
சிதம்பரம் அன்றி யுண்டோ — தெரி

அநுபல்லவி

விரிவுற்ற பூலோக கயிலையென் றுளம்ஒரு
மித்து நடந்தெதிர் கொண்டு — மேரு

ஒத்த இரண்டோ டிரண்டு — கோபு
ரத்தைக் கண்ணுரவே கண்டு                    தெரி

**சரணம்**

1. மேலைத் திசைக்கோபு ரத்தினிற் கற்பக வேழ முகன்றனை வாழ்த்தி — நல்ல
நீலத் திருமயில் ஏறுங் குமரன்முன் நின்று தொழுதடி போற்றி — அநு
கூலச் சிவகங்கை மூழ்கிஅந் நீரைஉட் கொண்டு மனக்குறை ஆற்றி — இந்த
ஞாலத்தை யீன்ற சிவகாம சுந்தரி பாலுற் றிருவினை மாற்றி — வெகு
சீலத்து டன்மலர் சாத்தி = அர்த்த = சாமத்தி லேதொழு தேத்தி                    தெரி

2. நம்பித் திருமூலத் தானத்தி லேதுதி நாத்தழும் பேறப் பயின்று — உமை
அம்பிகை தாளைப் பணிந்து மலாதியோ டைந்து புலாதியை வென்று — நிதம்
உம்பர் வணங்கும்பே ரம்பலத் தானைக்கண் டுண்மையாய்ச் சேவித்த கன்று — கள்ள
வெம்பிற விப்பிணி வேரைப் பொடிசெய்யுஞ் செம்பொற் சபைநாடிச் சென்று - கொடிக்
கம்பத் தருகினில் நின்று — கையால் — கும்பிட் டரகரா வென்று                    தெரி

3. ஞான சபைதன்னைச் சேவித்தங் குள்ள ரகசிய உண்மையை நாடி — ஒளி
யானத்தை அற்புத ஞானக்கண் ணலறிந் தானந்த வாரியில் ஆடித் — தவ
மோனத் துடனங் கிருந்து செபங்கண் முழுதுஞ் செபித்தன்பு நீடி — நாளும்
வானத் தவர்க்குங் கிடையாத முத்திநி தானத்திற் சேவடி தேடி — மெய்த்தி
யானத்தி லேதுதி பாடி — அஞ் — ஞானத்தை வேரறச் சாடித்.                    தெரி

ப ச் ச் நி = த ம நி த மா ; || க் ரி சா = ; ம க ரி ச ரி ம ||
ர த்தைக் . . கண்ணை . ர ; வே . கண் . . டு .

"தெரிசித்த" பல்லவியைப்பாடி நிறுத்தவும்

௪. த ம ப ம = க ரி ம க ரி ச ரி ம || க ரி ம ப = ம ப ம ப ச் நி த ம ||
மேலைத்திசைக் கோபுரத் தினிற்கற்பக வே ழ மு கன் றனை வா . ழ்த்தி நல்ல

ப ச் நி த = ம க ரி ம ம க ரி ச || ச ரி ச ரி = ம ப ம ப ச் நி த ம ||
நீல த்தி ரு மயில் ஏறும் குமரன் முன் நின்று தொழு தடி போற் றி . அரு

ம க ரி ச = நி த ம ப ச ச ச ரி || ச ரி ம ம = ப ச் நி த ம க் ரி ம ||
கூ . லச்சி வ கங்கைமூழ்கி அங்கரை உட் கொண்டு ம னக் குறை ஆ ற் றி, இந்த

ம ப ச் நி = த ம க ரி ம ப ச் நி || ச் நி த ம = க ரி ச ரி ம ப ச்சா ||
ஞாலத்தையீன் ற சிவ கா ம சுந் த ரி பா . லுற்றி ரு வினைமாற் றி வெகு

ப ச் ச் ரி = ம் க் க் ரி ச் ச் நி த || மா க ரி = ம க ரி ச ச ச ரி ம ||
சீலத் துடன் மலர்சாத்தி அர்த்த சா ம த் திலே தொழுதேத் தி .

"தெரிசித்த" பல்லவியைப்பாடி நிறுத்தவும்

## 3

இராகம்: திருமூர்த்தி ஆ: சரிகமதநிச { சண்முகப்பிரியாவிற் பிறந்தது.

தாளம்: ஆதி அ: சநிதமகரிச

### பல்லவி

தெய்வீகத் தலம்இந்தத் தில்லை = இந்த
வைபோகம் எங்கெங்கும் இல்லை (தெய்வீக)

### அநுபல்லவி

துய்ய வேதனுமாலுந் தேடியே — காணச்
செய்ய தாமரைத்தாளால் ஆடியே — நின்ற
ஐயன் இருந்துவாசஞ் செய்யுந் தென்கயிலாசம்
ஆமே இணைசொல்லப் போமே ஒருவராலே (தெய்வீக)

### சரணம்

1. மூர்த்தியுந் தீர்த்தமுந் தலமும் — மூன்று
முக்கியமும் ஒருமித்த நலமும் — கண்ணால்

பார்த்தவர்க் குண்டோசஞ் சலமும் — நினைவின்
படியேவந் தெய்துஞ்ச கலமும் — வேத
சாத்திரமு மிதைத்தானே யோதுமே — நிமிடந்
தோத்திரமா யுரைத்தாலும் போதுமே — யிதிலோர்
மாத்திரை யாம்போது வீற்றிருந் தாற்றீது
வருமோ பிறவியைத் தருமோ சற்றுந்தராது தெய்வீக

2. எப்போதும் நலந்தரு வதுவே — இது
எல்லாச் சமயத்துக்கும் பொதுவே — இதற்
கொப்பான தலம்இனி இதுவே — விராட்
டுள்ளக் கமலத்தானம் இதுவே — வச்சிரக்
கொப்பாகும் குழைச்சியோர் பாகனர் — காலம்
தப்பாது வரும்அபி ஷேகனர் — தமக்கு
ஒப்பாந் தலந்தமது மெய்ப்பான தலம்இது
உண்மை இதிலுள்ள வண்மை இன்னும் அநந்தம் தெய்வீக

ப: ச்ா ; நி த ச் நி நி த த த ம தா த ம த நி | ச்ா ; ; ச் நி
தெய் . வீ . . . . . . . க த் த லம் . இ ந் த . . த்தி ல்.

| த ம க ரி க ம த நி ||
. . லெ . இ ந் . தத்

2. ச்ா ; ஙி ச் ரி ச் க் ரி ரி ச் நீ ஙி த த த ம த ஙி | ச்ா ; ; ச் ஙி
தெய் . வீ . . . . . . . . கத் த . . . ல ம் இ ந் த . . த்தில் .

| த ம க ரி க ம த ஙி ||
. . லை . இ ந் . த

ச்ா ; ஙி த ச் ஙி ஙி த த த ம கா ; க ரி | சா ; ; க ரி
வை . போ . . . . . . . கம் . எங் . கெ ங் கும் . . இல் .

| ச ஙி ச ரி க ம த ஙி ||
. . லை . . . . .

ச்ா ; ஙி ச் ரி ச் க் ரி ரி ச் நீ ஙி த த த ம த ஙி | ச்ா ; ; ச் ஙி
தெய் . வீ . . . . . . . . க த்த . . லம் . இ ந் த . . த்தி ல்

| த ம க ரி க ம த ஙி ||
. . லை . இ ந் . த

ச்ா ; ஙி த ச் ஙி ஙி த த த ம கா ; க ரி | சா ; ; க ரி
வை . போ . . . . . . . கம் . எங் . கெங் . கும் . . இல் .

| ச ஙி சா ; ; ||
. . லை . .

அ ப: த் நி த நி த ம க ம க ரி க ரி ச நி் ச ரி | க ரி ச ரி க ம க ரி
து ய்ய வே . த னும் மா . லும் தே . டி யே கா . ணச் செய் ய தா . ம றை த்தா .

| ச ரி க ம த ரி க ம ||
ளால் ஆ . டி யே நி ன் ற

ம க ம த நி த நி ச் நி ச் ரி ச் ரி க் ம் க் | ரி க் ரி ச் நி ச் நி த
ஐ யன் இ ருந் து வா . சம் செய் யும் தென் க யி லா . சம் ஆ . மே இ ணை சொ ல் லப்

| ம த ம ம் க ம த நி ||
போ . மே ஒ ரு வ ரா லே

"தெய்வீக" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

ச: கா கா ம க க ரி ச ரி க ரி சா நி ச | நீ சா ரி ச நீ
எப் போ . தும் ந லம் த ரு வ து வே இ து எல் லா ச் சம யத்

| ச நி த ம த நி ச ரி ||
துக் கும் பொ து வே இ தற் கு

கா மா த ம க ரி க ம த ம த த நி த . | ம் த நி த நி ச் நி நி
ஒப் பா ன த லம் இ னி இ து வே வி ரா ட் டு உள் . ளக்க ம ல த்தா .

| த ம க ரி ச ரி க ம . ||
னம் இ து வே வ ச் சி ரக்

த நி த நி த ம க ம க ரி ச ரி ச நி ச ரி | க ரி ச ரி க ம க ரி
கொ ப் பா . கும் கு ழை ச்சி யோ ர் பா . க ளுர் கா லம். த ப் பா . து வ ரு ம்

| ச ரி க ம த ரி க ம ||
அ பி ஷே க ளுர் த மக் கு.

ம க ம த நி த நி ச் நி ச் ரி ச் ரி க் ம் க் | ரி க் ரி ச் நி ச் நி த
ஒ ப் பாந் த லந் த ம து மெய் யுப் பா ன த ல மி து உண் மை இ தில் உள் ள வண்மை

| ம த ம . ம க ம த நி ||
இன் னு ம் அ ந ந் த ம்

"தெய்வீக" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

# 4

இராகம்: பாலசந்திரிகா — ஆ: ச க ம ப த நி ச — { கரகரப்பிரியாவிற் பிறந்தது

தாளம்: ஆதி — அ: ச நி த ம க ரி ச

பல்லவி

எந்தத் தலத்தையும் இந்தத் தலத்துக்கு
இணை சொல்லக்கூடாதே ஐயன் — எந்த

**அனுபல்லவி**

சொந்தத் தலம்சிதம் பரமென்று மனதிற் சிந்தித்துக் கருமலை போலே — எதிர்
வந்திட்ட முயலகன் மேலே — ஆ — னந்தக்கூத் தாடின தாலே — எந்த

**சரணம்**

1. ஆதியில் வெண்குட்டந் தீர்ந்து கவுடதேசத் தரசன் பொன்னிற மானன் தேகம் - நீசச்
சாதியின் மூவர் புலைத்தன்மை போய்க்கதி சார்ந்தா ரதுவேதெய் வீகம் — ஒரு
வேதியன் வாயிலோர் சோறிட்டுக் கூடுபோய் வீட்டிற் புகுந்தது காகம் — பின்னுந்
தீதறு தவத்தாலெப் போதுந் தரிசனம் செய்திடு மோர்புலி நாகம் — முன்னம்
பெய்தது பொன்மழை மேகம் — இந்த வைபவம் — இன்னும னேகம். — எந்த

2. கழுகு புசிக்கத் தவறி யிறந்த கயலும் அடைந்தது கதியே — நீரில்
முழுகி யெழும்ப இளமையைத் தந்து முதுமையைத் தீர்த்ததிப் பதியே — கூவி
அழுத புலிக்குட்டி பண்டிலைப் பாற அருகில்வந் ததுபயோ ததியே — கொன்ற
பழிசெய்யும் பார்ப்பான் ஒருவ னுக்குமுத்தி பாலித்த தையன்சந் நிதியே — அத
னலித்தை யேதினந் துதியே — செய்து — மேலிட்டுச் சொல்லும்சு ருதியே. — எந்த

3. எங்கெங்குந் தானிதைப் பூலோக கயிலாசம் என்றுரைப் பாரெல் லோரும் — இதில்
அங்கம் இழந்துதி ரும்பிப் பிறப்பரோ ஆடிய தாளைக்கண் டோரும் — மலர்ப்

பங்க யன்முக லோர்வந் தருச்சனை பண்ணுகி ரூரதைப் பாரும் — ஒளி
பொங்குந்தொ ளாயிரத் துத்தொண்ணூற் றென்பது பங்குக் கலையிதில் ஆருந் - தலம்
எங்கெங்கும் ஓர்கலை சாரும் — அதும் — இங்கர்த்த சாமத்திற் சேரும். எந்த

1. பா ; த நி ச் நி தா மா ம க ரி ச | க ரீ , ச நி சா | கா ம க , ரி ச க ம ||
எங் . த . த்த . லத் தை யு ம் . . இ ந் . த . த்த லத் துக் கு . . .

2. பா த நி ச்ா நி த நி த மா ம க ரி ச | க ரீ ; ச நி சா | கா ம க ரி ச க ம ||
எங் . , தத் த . லத் . தை யு ம் . . இ ந் . த . த்த லத் துக் கு : . .

3. ப த நி ச் க்ா ம் க் ர்ி ச் நி த ம க ரி ச | க ரீ , ச நி சா | கா ம க ரி ச க ம ||
எ ங் . . த த்த . ல த்தை. யு ம் . . இ ந் . த . த்த லத் துக் கு . . .

பா தா நீ நி த தா மா ம க க ரி | சா ; ; ; | நி த ம க ரி ச க ம ||
இ ணை சொல்ல . க் கூ டா . . . தே . . . ஐ . . . யன் . .

ப த நி ச் க்ா ம் க் ர்ி ச் நி த ம க ரி ச | க ரீ ; ச நி சா | கா ம க ரி ச க ம ||
எ ங் . . த த்த . ல த்தை . யு ம் . . இ ந் . த . த்த லத் துக் கு . . .

பா தா நீ நி த தா மா ம க க ரி | சா ; ; ; | ; ; ; ; ||
இ ணை சொல்ல . க் கூ டா . . . தே . . . . . . .

அ.ப. தா நீ த ம க ரி ச க ம ப த நி த ம | பா தா நீ ச் நி | த ம ப த நி ச் நி ச் ||
சொந்தத்தலம் சிதம்பரமென்று மனதில் சிந் தித் துக் க ரு ம லேபோ. லே . எதிர்

ச்ா க்ா ம் க் ரி ச் நி த நி த் ம க ம த | நி ச் நி த நி த் ம க | ம க ரி ச நி ச க ம ||
வந் திட்ட மு ய ல கன்மே . . லே . ஆ . னந் . . த . . க்கூ . த்தா . டின தா . லே .

"எந்த" பல்லவியைப் பாடி நிறுத்தவும்

ச. மா க் ரி ச க ம கா ரி ச க ம கா ரி | ச நி சா நி ச க ம
ஆ தி யில் வெண் கு ட்டம் தீர் ந்து க ம ட தே ச த்த் ர சன் பொன் னி ற மா

| ப ம ப த நி நி த ம ||
. ஞன் தே . கம் நீ . . சச்

பா த நி நி த ம க ரி ச க ம பா த நி | ச் நி த ம க ரி ச க
சா தி யின் மூ . வர் பு லைத் தன் . மை போய்க்க தி சா ர்ந் தா . ர து வே .

| ம ப த நி த ம ப த ||
தெய் . வீ . க ம் ஒ ரு

நி த ம க ரி ச நி த நி ச க ம பா த நி | ச் நி த ம ; க ரி
வே . தி யன் வா . யி லோர் சோ . றி ட்டுக் கூ டு போய் வீ . . ட் டிற் . பு குந்

| ச க மா ப தா நி ||
த து கா கம் பின் னும்

நி த ம ப நி நி ச்ா க்ர் ம் க் க் ரி ச்ா | நி ச் க் ம் க் ரி ச் நி
தி , த று த வத் தா லெப் போ . . . தும் த ரி ச னம் செ ய் தி டும்

| ச்ா நி த ம ப த நி ||
ஓர் பு லி நா . . கம்

ச்ா க்ா ம் க் ரி ச். நி த ம க . மா ப த | நி . ச் நி த நி த ம க
முன் னம் பெ ய் த து பொ ன் ம ழை மே கம் . இ ந் த வை . ப வ ம்

| ம க ரி ச நி ச க ம ||
இ ன் னு ம னே . க ம்

"எந்த" பல்லவியைப் பாடி நிறுத்தவும்

## 5

இராகம்: சிகண்டி — ஆ: ச க ம ப த நி ச — { சட்விதமார்க்கணியிற் பிறந்தது.

தாளம்: ஆதி — அ: ச நி த ப ம க ச

### பல்லவி

எந்நாளும் வாசமாய்ச் சிதம்பரத் தலத்திலே
இருக்கத் தவஞ்செய் தேனோ

அனுபல்லவி

பன்னகம் புலிகரகம் பார்ப்பான் புலையன்முதல்
பத்திசெய் தேயிதின் முத்திபெற் றிடலாலே எந்நா

சரணம்

1. மூந்தி யன்னையுத ரந்த னிற்கருவி ருந்து திருவயிறு நொந்து பசியொடுபி
றந்து நிலமிசைத்த வழ்ந்து தளர்நடைச் நடந்து பருவ மாகி
இந்த மனைமனைவி மைந்தர் நிதிபலவும் எந்தன் உடைமையிது சொந்தமெனவே சொல்லி
சிந்தை தனின்மதமி குந்து பலபலஅ கந்தைக ளேசெய்தி ருந்ததல் லாமல் எந்நா

2. தேச மதற்குளொரு காசுகொ டுக்கப்பிர யாசம னத்தர்தமைப் போச னெனத்
ஆசு முதற்கவிகள் பேசி யனுத்துமனம் கூசுவ தேயல்லா மல் [துதிசெய்து
ஈசன் அதிகப்பிர காசன் அணிசருமத் தூசன் உமைமகிழ்உல் லாச னடியவர்கள்
நேச னிலகுகயி லாசன் கனகசபை வாசன்புலிசைநட ராசனைச் சேவித்து எந்நா

ப. ச்ா ; நி த ப ம நி த ப ம கா க ச | சா கா ச ச நி த | ச க ம ப த ப த நி ||
எந் . நா . ளும் வா . . . ச மாய் . | ச்சி தம் ப . ர த் . | த . ல த் தி . லே .

2. ச்க்ம்க்ச்நி த ப நி த ப ம கா க ச | சா கா ச ச நி த | ச க ம ப த ப ம ப ||
எ ந் . . நா . ளும் வா . . . ச மாய்ச் | சிதம் ப : ர த் | த . ல த் தி . லே

தா நீ த்ர் பா ப ம கா ப் ம பா | தா , ப ப த நீ | த் நி ச் நி த ப த நி ||
இ ருக் கத் த வ ம் . செய் . | தே . . . . . | ளோ . . . . . . . .

ச்ா ; நி த ப ம நி த ப ம கா க ச | சா கா ச ச நி த | ச க ம ப த ப ம ப ||
எங் . நா . ளு ம் வா . . . ச மாய். | ச்சி தம் ப . ர த் | த . ல த் தி . லே

தா நீ தா பா ப ம கா ப ம பா | தா , ப ப த நீ | நி த தா பா ; ||
இ ருக் கத் த வ ம் . செய் . | தே . . . . . | ளோ . . . . .

அ.ப. தா பா ப ம கா ப ம பா தா பா | தா நீ நி த த ப | ப ம ப த நீ ச்ா ||
பன் . ளு . கம் பு . வி காகம் | பா . ர்ப்பான் . . | பு லே யன் மு தல்

ச்ா க்ா ச் க் ம் க் ச்ா ; ச் நி நி த | ச் நி நி த ப ம கா | ம க ச க ம ப த நி ||
பத் தி செ ய் . . தே . யி . தில் . | மு த் தி . பெ/ற் . | றி . ட . லா . லே .

"எங்நாளும்" பல்லவியைப் பாடி நிறுத்தவும்

ச. த நி ச்ா நீ த ச் நி நி தா பா தா | த நி த ப த ப க ம
தே . . ச ம . த் . ற்கு ளொ ரு | கா . சு கொ டுக் க ப்பி ர

| க க ச க ச க ம ப ||
யா . ச ம னத் தர் த மைப்

த நி த ப ம ப த ப ம ப த ப ம க் ச க | ச ச க ச நி த நி த
போ . ச னெ னத் து தி செ ய்து ஆ . க மு த ற் க வி கள் பே சி ய் லு த்து ம ன

| ப த நி ச க ம ப ம ||
ம் கூ சு வ தே யல் லா மல்

ப ம க ம ப த ப த த நி த ப ம க ச க | ம ப த ப. த நி த நி
ஈ . ச ன தி க ப்பி ர கா . சன் அ ணி ச ரும் த் து . சன் உ மை ம கிழ் உல்

| ச்ா நி த ப த நி ச் ||
லா , ச ன டி ய வ:ர் கள்

ச்ா க் ச் க் ம் க் ச் நி ச் நி த நி த ப ம | ப த ப ம ப ம க ச
நே ச னி ல கு க யி லா . சன் க ன க ச பை வா . சன் பு லீ சை ந ட

| ச க ச க ம ப த நி ||
ரா . ச னைச் சே . வித் து

ச்ா ; நி த ப ம நி த ப ம கா க ச | சா கா ச ச நி த
எங் , நா . ளு ம் வா . . . ச மா ய்ச் சி தம் ப . ர த்

| ச க ம ப த ப ம ப ||
த . ல த் தி . லே .

| தா | நீ | தா | பா, | ப | ம | கா | ப | ம | பா | \| | தா | , | ப | ப | த | நீ | , |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இ | ருக் | கத் | த் | வ | ம் | . | செ | ய் | . | | தே | . | . | . | . | . | |

| \| நி | த | தா | பா | ; \|\| |
|---|---|---|---|---|
| ஞே | . | . | . | . |

# 6

இராகம்: கன்னடமாருவம் — ஆ. ச க ம ப த நி ச — கமனுச்சிரமத்திற் பிறந்தது.

தாளம்: ரூபகம் — அ. ச நி த ப ம க ச

**பல்லவி**

பல மந்திரத்திற்கும் பலமந்திரம் — பொன்னம்
பல மென்னும் மந்திரமே (பல)

**அனுபல்லவி**

புலவர்க்கும் முனிவர்க்கும் பலவர்க்கும் தியானிக்கப்
பொதுவாயிருக்கும் மந்திரம் அதுவே சுருக்கமந்திரம் (பல.)

**சரணம்**

1. சென்ன மரணவாதை நீக்கிய மந்திரஞ்
சேரும் மலமாயை போக்கிய மந்திரம்
மனதில்மெய்ஞ் ஞானமுண் டாக்கிய மந்திரம்
மந்திரத்திற் கெல்லாஞ்சி லாக்கிய மந்திரம் — பல

2. முதுமைபோய் இளமை கொடுத்திட்ட மந்திரம்
மூன்று புலையர்நீசம் விடுத்திட்ட மந்திரம்
கதியிலோர் நண்பாக மடுத்திட்ட மந்திரம்
காட்டுப் புலியைப் பாம்பைத் தடுத்திட்ட மந்திரம் — பல

3. அதுவே எவர்க்குங் காயசித்திக்கு மந்திரம்
அதுவே நினைவின்படி சித்திக்கும் மந்திரம்
அதுவே அழிவில்லாத முத்திக்கு மந்திரம்
அதுவே சிந்தித்த நெஞ்சில் தித்திக்கும் மந்திரம் — பல

ப. ப க மா = பா பா பா பா | ப ம பா = தா நி ச் நீ தா |
ப . ல மந் தி ரத் திற் | கு ம் ப ல மந் . தி ரம்

பா பா = ப ம கா க ச கா | ப ம க ம = க ச நி த நி ச க ம ||
பொன் னம் ப . ல மெ ன் னும் | ம ந் தி . ர ‹ மே . . . . .

2. ப க மா = பா பா பா பா | ப ம ப த = நி ச் க் க் ச் நி த ப |
ப . ல மந் தி ரத் திற் கும் . ப . ல . மந் தி . ர ம்

த நி ச்ா = நி த ப ம க ச கா | ப ம க ம = க ச நி த நி ச க ம ||
பொன் னம் ப . ல . மென் னும் மந் தி . ர . மே . . . . .

3. ம க ம ப = த ப ம க ச க் ம ப | த நி த ப = த நி ச்ா நி த நி ச் |
ப . ல . மந் தி . ரத் திற் கும் ப . . ல . மந் தி . . ர ம்

நி ச் க்ா = ச் நி த ப ம க மா | ப ம க ம = க ச நி த நி ச க ம ||
பொன் னம் ப . ல . மென் னும் மந் தி . ர . மே . . . . .

“பல மந்திரம்” பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

அ. ப. ; ப த = ; நி தா பா நி . த | ப ம க ச = ; க மா பா ; ||
. பு ல . வ ர்க் கும் . . . . . முனி . . வ ர்க் கும் .

ப க மா = பா ; தா பா | தா நீ = த ப தா நீ . ச்ா ||
ப . ல வர்க் கும் . தி யா . . . ளிக் கப்

த நி ச்ா = க்ா ச் க் ம் க் ச்ா | நி ச் க் ச் = நி த ப ம ப த நீ ||
பொ . து வா யி . ருக் கும் மந் . . தி . ர ம் . . .

ச்ா நி த = நி ச் நீ த ப மா | க ச க ம = ப ம க ச நி ச க ம ||
அ து . வே. . . . . | சு ரு க் க . . ம ந் தி . ர ம்

"பல மந்திரம்" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

௪. பா தா = பா ; ; ம க | கா மா = கா க ச சா கா ||
அ து வே . . எ . | வர்க் . கும் கா . . டு

ம க ம ப = த நி த ப ம க ச க | ப ம க ம = க ச ச நி சா ; ||
சி த் . . தி க் . . கு . . . | ம ந் . . தி . ர ம் . .

; நி ச = ச நி தா பா ; | தா நீ = சா கா சா கா ||
. அ து வே . . . . | நி னை வின் . ப டி

ச க மா = க ம பா ம ப தா | ப த நீ = நி த ப ம பா ; ||
சி த் . தி க் . கு ம் . | ம ந் . தி . . . ரம் .

; ப த = ; நி தா பா பா | நி த ப ம = க ச க ம பா ; ||
. அ து . வே . அ மி | வி ல் . . லா . . . த .

ப க மா = பா ; தா பா | தா நீ = த ப த நி ச் நி ச்ா ||
முத் . . திக் . கு . | மந் . தி . . . ர ம் .

; த நி = ச் க் ச் க் ம் க் ச்ா | நி ச் க் ச் = நி த ப ம ப தி நீ . ||
. அ து வே ! . . . . . . சி ந் . . . ஜி த் த . நெ ஞ் சில்

ச்ா நி த = நி ச் நீ த ப மா | க் ச க ம = ப ம க ச நி ச க ம ||
ஜித் தி க் கு ம் . . . . . ம ந் . . . தி . ர ம் . . . . .

"பல மந்திரம்" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

# 7

இராகம்: கமனச்சிரமம் — தாளம்: ரூபகம்

ஆ. ச ரி க ம ப த நி ச

அ. ச நி த ப ம க ரி ச

**பல்லவி**

பரந்தனை அடைந்திட வேண்டுமென்றால் — சிதம்
பரந்தனை அடையுங்கள் மாந்தர்களே — பரந்

அநுபல்லவி

வ்ரந்தனைத் தரும் இந்தத் தலந்தனிலே இருந்த
மாந்தரெல் லாருந்தவ வேந்தரே — பரந்

சரணம்

1. காட்டில் இருக்கின்ற புலியும் பாம்பும்பெற்ற
காட்சியுங் கேட்டிருப் பீர்களே
வீட்டில் இருக்கின்ற காகமும் உயர்ந்தமேல்
வீட்டினில் சென்றதுங் கேட்டிருப் பீர்களே — பரந்

2. சாதி யீனமுள்ள புலையர் மூவரிதில்
தனித்தனி யேபுனித ராகினார்
வேதிய ரில்அதிக பாவி யொருவரிதில்
மேவிப் பரகதியில் ஏகினார் — பரந்

3. வெள்ளியினால் எங்கள் ஐயன் இருக்கச்செய்த
வீட்டை வடகயிலை என்பாரே
தெள்ளிய செம்பொன்னி னாற்செய்த வீடிதைத்
தென்கயி லாயம் என்பாரே — பரந்

ப. பா தா = நி ச் நீ நி த ப ம பா | ம க ப ம =, நி த ப ம க ரி சா |

ப் ர ங் த . . னே . . . . அ . டை ங் தி . . . ட . .

ச நி த பு = த நி ச ரி க ரி க ம | பா ; = ; , ம க ரி க ம ||

வே ண் . . டு ம் . . எ ன் . . , ரு ல் . . . . . . . . .

2. ப த நி ச் = ரீ ச் நி த நீ ச் நி த | ப ம க ம = ப த நி ச் நி த ப ம |

ப . ர ங் தனே . . . . . . அ . டை ங் . . தி . ட . . . .

க ரி ச நி = த பு த நி ச ரி க ம | பா ; = ; , ம க ரி க ம ||

வே ண் . . டு ம் . . எ ன் . . ரு ல் . . . . சி . த ம்

பா த நி = தா ப ம கா ரீ | க ம ப ம = க ம க ரி த ரி கா |

ப ர ங் . . . த னே அ . டை . யு ங் . . க ள் .

க ம க ரி = ச நி த பு த நி ச ரி | கா ; = க ரீ , சா ; ||

மா ங் . . . . . . . த ர் க . ளே . . . . . .

அ. ப. ப ம பா = தா பா தா நீ | த நி தா = ப ம பா ம க மா ||

வ . ர ங் த னேத் த ரும் இ ங் . . த . . . . த்

ப க மா = பா தா நி ச் நி த | ப ம பா = நி த ச் நி ச்சா ச்சா ||

த . லங் த னி லே . . . . . . . . இ . ருந் த

ச் ரி க் ரி = ச் நி த ப த நி ச்சா | நி த ச் நி = த நி த ப ம க மா ||
மா ங் . . . . . . . த ர் . எ ல் . . லா . . . ரு ம் .

க ம ப த — நி ச் நி த ப ம கா | நி த நி த = ப ம க ரி ச ரி க ம ||
த . வ . . . . . . . . . வே ங் . த . . ரே . . . . .

"பரந்தனே" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

ச. ; மா = ப ம கா க ரி கா | ப ம க ம = க ரி சா ச நி தா ||
வெள் ளி யி ஞல் எ ங் கள் ஐ . ய ன் . . இ ரு க் கச் .

ப த நி ச = ரி ச நி ச ரி கா | க ரி க ம = ப ம ப த நி தா பா ||
செ ய் . . த வீ . . ட் டை வ ட க யி லே . எ ன் . பா ரே

ச்சா ச் நி = த நி தா ப ம பா | த நி ச் நி = த ப த நி ச்சா ரி ||
தெள் ளி ய செம் . . பொ ன் னி ஞல் . . . . . . செய் த

ச் ரி க் ம் = க்கா ரி க் ரி ச்சா | நி த நி ச் = நி த ப ம க ரி க ம ||
வீ . . . டி தை த் . தென் க யி லா . ய ம் எ ன் பா . ரே.

"பரந்தனே" பல்லவியைப்பாடி நிறுத்தவும்.

# 8

இராகம்: ஆர்பி — ஆ. ச ரி ம ப த ச — சங்கராபரணத்திற் பிறந்தது.

தாளம்: ஆதி — அ. ச நி த ப ம க ரி ச

பல்லவி

ஒருக்கால் சிவசிதம் பரம்என்று நீசொன்னால்
இருக்கா தூழ்வினையே — ஒருக்கால்

அனுபல்லவி

கருக்கா ரருக்கிது தெரியும் பொ துவில்ஒரு
காலைத் தூக்கிநின்ற கோலத்தை மனத்தில்வைத் — தொருக்கால்

சரணம்

1. சூழ்வலி யுடையபஞ் சாக்கினி யிடைநின்று
சொரூபம் கரிவானேன் — மனை
வாழ்வை வெறுத்துக்கனி காயுஞ் சருகுந்தின்று
மாதவம் புரிவானேன் — பல
வேள்விகள் செய்தந்த ஓமகுண்டத்தில் நெய்யை
வீணிலே சொரிவானேன் — காதும்

கேள்வியில் லாதமுழு மோனிக ளாய்த்தலையில்
கிளைத்திட்ட சடைதனை வளைத்திட்டுத் திரிவானேன் ஒருக்கால்

2. வேத மந்திரஞ்சொல்லி ஆயிரந் தெண்டன்புவி
மீதினில் விழுவானேன் — இரு
பாதமுஞ் சிவந்திடத் தலங்கள் தொறுந்திரிந்து
பலதெய்வந் தொழுவானேன் —கொல்லன்
ஊதும் துருத்திபோலே வாயுவைக் கும்பித்துடல்
யோகத்தில் எழுவானேன் — ஐந்து
பூதங்க ளுங்கலங்க அங்கப்பிர தட்சணமாய்ப்
புரண்டு புரண்டுமதி மருண் டெழுவானேன் ஒருக்கால்

3. உருக்கி உடலைமெத்த வருத்தி உறக்கத்தையும்
ஊணையும் துறப்பானேன் — சீலை
அரைக்கில்லா நிருவாணி யாகி லோகவாழ்க்கை
அனைத்தையும் மறப்பானேன் — வரு
நரைக்குந் திரைக்குங்கற்பம்அருந்திச் சித்தர்களாகி
நாடெங்கும் பறப்பானேன் — சபைத்
திரைக்குள்ளே மறைவாகி இருக்கும் ரகசியத்தின்
திறந்தெரியாமல்வீணே இறந்தின்னும் பிறப்பானேன். ஒருக்கால்

ப. ; த ரீ ச்ா , ச் நி தா நி த பா | ; ம பா த பா | ப ப ம க ரி ச ரீ ||
. ஒருக்கால் . சி . வ சி . தம் . ப ர மென் று நீ . . . சொன் ஞல்

; ச ரீ சா , ச நி தா சா ரீ , | ப ம க ரீ ; , | சா ; ; ; ||
. இ ருக் கா . தூ . ம் வி னை யே . , . . . . . . . .

அ.ப. ; ப மா பா த ச்ா ச்ா ரீ ரீ | ரீ ம் க் ரீ ச்ா | ச் நி தா தா நி த பா ||
. க ருக் கா . ர ருக் கி து தெ ரி . யும் பொ து . வில் ஒ . . ரு

; த ரீ ச் ச் நி தா தா தா பா | ; ம பா த பா | த ப ம க ரி ச ரி ம ||
. கா . ஓத் தூ . க் கி நின் ற . கோ . லத் தை ம . ன த் தில் லை .

ப த த ரீ ச்ா , ச் நி தா நி த பா | ; ம பா த பா | த ப ம க ரி ச ரீ ||
. த்தொருக்கால். சி . வ சி . தம் . ப ர மென் று நீ . . . சொன் ஞல்

; ச ரீ சா , ச நி தா சா ரீ | ப ம க ரீ ; , | சா ; ; ; ||
. இ ருக் கா . தூ . ம் வி னை யே . . . . . . . . . .

ச. ; தா , த தா தா தா தா பா | ம ப தா பா பா | த ப ம க ரி ச ரீ ||
. சூழ் . வ லி யு டை ய பஞ் சா . க் கி னி யி . டை . நின் று

; ச ரீ சா , ச நி தா சா ரீ | ப ம க ரீ ; , | சா ; சா சா ||
, சொ ரூ பங் . க . ரி வா . னே . . . . . . . ன் . ம னை

